# அம்மா ஒரு கொலை செய்தாள்

'அம்பை

அம்மா என்றதும் பளிச் பளிச்சென்று சில நிகழ்ச்சிகள் மட்டுமே நெஞ்சைக் குத்து கின்றன.

அக்கா கல்யாணி அடிக்கடி மயக்கம் போட்டுவிழுந்து கொண்டிருந்தாள். புரிந்து கொள்ளும் வயதில்லை எனக்கு. நான்கு வயது.

விடிகாலையில் கண் விழிக்கிறேன். ஏதோ தமுக்கு மாதிரி சத்தம் கேட்கிறது. கதவருகே சென்று பார்க்கிறேன். கல்யாணியைப் பல கையில் உட்கார்த்தி இருக்கிறார்கள். எதிரே எவனோ கொத்து இலையோடு நிற்கிறான். ஆ ஊ வென்று சில மாதங்கள் மட்டுமே சிரிப் புக் காட்டிய தம்பிப் பாப்பா நான் இருந்த அறையிலேயே தொட்டிலில் இருக்கிறான்.

"நீரஜாட்சி, போய்க் கொண்டு வா" என் கிறார்கள் யாரோ.

நான் அம்மாவைப் பார்க்கிறேன்.

கரு நீலப் புடவை நினைவில் இருக்கிறது. தலை மயிரை முடிந்து கொண்டிருக்கிறாள். என் அறையை ஒட்டிய சின்ன அறையில் அம்மா நுழைகிறாள். தலைப்பை நீக்குகிறாள். கையில் இருந்த சிறு கிண்ணியில் மெல்ல தன் மார்பிலிருந்து பால் எடுக்கிறாள். கண் களில் நீர் கொட்டுகிறது.

விடிகாலை இருட்டோடு குளியலறையில் புதைக்கப் பட்டிருக்கும் பெரிய தவலைக்கு அடியே விறகு வைத்து வெந்நீர் காய்ச்ச அம்மா எழுந்திருக்கிறாள் தினமும்.

ஒரு நாள் நான் அவளைப் பார்க்கிறேன். அம்மாவின் தலைமயிர் முடிச்சவிழ்ந்து தொங்கு கிறது. குந்தி உட்கார்ந்திருக்கிறாள் அம்மா. கூந்தல் பாதி கன்னத்திலும், பாதி காதின் மேலும் விரிந்து கிடக்கிறது. அடுப்புபற்றிக் கொண்டதும் குனிந்து பார்த்த அம்மாவின் பாதி முகத்தில் தீயின் செம்மை வீசுகிறது. அன்று அம்மா சிவப்புப் புடவை வேறு உடுத் தியிருக்கிறாள். உற்றுப் பார்த்துக்கொண்டே இருக்கையில் 'டக்' கென்று அவள் எழுந்து நிற்கிறாள். கூந்தல் முட்டுவரை தொங்கு கிறது. விலகியிருந்த தலைப்பினூடே ஊக்கு கள் அவிழ்ந்த ரவிக்கை அடியே பச்சை நரம்போடிய வெளேரென்ற மார்பகங்கள் தெரிகின்றன. எங்கிருந்தோ பறந்து வந்து அங்கே நின்ற அக்னியின் பெண்ணாய் அவள் தோன்றுகிறாள். அவள் அம்மாவா? அம்மா தானா?

"காளி காளி மகா காளி பத்ர காளி நமோஸ்துதே..." என்ற ஸ்லோகம் ஏன் நினைவிற்கு வருகிறது?

"அம்மா..."

அம்மா தலையைத் திருப்பிப் பார்க்கிறாள்.

"இங்கே என்ன செய்யறாயடி?"

பேச முடியவில்லை. உடம்பு வியர்க்கிறது.

வீட்டில் ஹோமம் நடக்கிறது. அம்மா வின் உதட்டின் சிவப்பாலோ, குங்குமத்தின் தீடசண்யத்தாலோ, கொழுந்து விட்டெரியும் ஜ்வாலையின் பிம்பமே அவளாகப் படுகிறது. "அக்னியே ஸ்வாஆஆஹா..." என்று ஸ்வா ஹாவை நீட்டி முழக்கி நெருப்பில் நெய்யை ஊற்றுகிறார்கள். அந்த "ஸ்வாஆஆஹா..." வின் போது பார்வை நெருப்பின் மீதும் அம்மாவின் மீதும் போகிறது.

எண்ணெ தேய்த்துக் குளிப்பாட்டுகிறாள் அம்மா. புடவையைத் தூக்கிச் செருகியிருக் கிறாள். வெளுப்பாய், வழ வழ வென்று துடை தெரிகிறது. குனிந்து நிமிரும் போது பச்சை நரம்போடுகிறது.

"அம்மா நீ மாத்திரம் ஏம்மா இவ்வளவு வெளுப்பு? நான் ஏம்மா கறுப்பு?"

சிரிப்பு.

"போடி உன் அழகு யாருக்கு வரும்?"

நிகழ்ச்சிகளில் ஒரு சம்பந்தமுமில்லை. அம்மாதான் அவற்றின் ராணி. அசுத்தங்களை எரித்து சுத்தீகரிக்கும் நெருப்பு அவள். ஒரு சிரிப்பில் மனதில் கோடானுகோடி அழகு களைத் தோரணமாட வைப்பவள். அவள் சிருஷ்டி கர்த்தா. அவள் மடியில் தலை வைத் துப் படுக்கும்போது நீண்ட மெல்லிய தண் ணென்ற விரல்களால் தடவி, "உனக்கு டான்ஸ் கத்துத் தரப்போறேன். நல்ல வாகான உடம்பு" என்றோ "என்ன அடர்த் தியடி மயிர்" என்றோ சர்வ சாதாரணமான ஒன்றைத்தான் சொல்வாள். ஆனால் மனதில் குல்லென்று எதுவோ மலரும்.

அம்மாவைப் பற்றிய இத்தகைய உணர்வுகளை அம்மாவே ஊட்டினளா, நானே நினைத்தேனு தெரியவில்லை. என்னுள் பல அழகுகளுக்கு விதை ஊன்றிய போது தன்னுள் அவள் எதை ஸ்தாபித்துக் கொண்டாளோ தெரியவில்லை.

அப்போது பதிமூன்று வயது. பாவாடைகள் குட்டையாகப் போகஆரம்பித்துவிட்டன. அம்மா எல்லாவற்றையும் நீளமாக்குகிருள்.

அம்மா மடியில் படுக்கும் மாலை வேளைகளில் ஒன்றில் எங்கோ படித்த வரிகள் திடீரென்று நினைவு வர நான் அம்மாவைக் கேட்கிறேன்.

"அம்மா பருவம்ஞ என்னம்மா?"

மௌனம்.

நீண்ட நேர மௌனம்.

திடீரென்று சொல்கிருள்:

"நீ இப்படியே இருடீம்மா பாவாடையை அலைய விட்டுண்டு, ஓடி ஆடிண்டு..."

சித்தி பெண் ராதுவைப் பெண் பார்க்க வருகிருர்களாம். அம்மா போய் விடுகிருள் அங்கே. அந்த முக்கியமான நாளில் அம்மா இல்லை.

கல்யாணிதான் தீபாவளி அன்று எண்ணை தேய்த்துத் தலை மயிரை அலசி விடுகிருள். குளியலறையின் ஜன்னல் வழியாக இருள் கலையாத வானம் தெரிகிறது.

"கல்லுஸ்...ரொம்ப சீக்கிரம் எழுப்பிட்டேடீ. பட்டாஸ் சத்தமே கேக்கலியே இன்னும்."

"உனக்கு எண்ணை தேய்ச்சுட்டு நானும் தேய்ச்சுக்க வேண்டாமா? வயசு பதிமூணு ஆறது. எண்ணை தேய்ச்சுக்க வராது உனக்கு, குனிடீ".

கல்யாணிக்குப் பொறுமை கிடையாது.

தேங்காய் நாரை உரிப்பதுபோல் தலையை வலிக்க வலிக்கத் தேய்க்கிருள் கல்யாணி.

கத்தரிப்பூ நிற ஸாடின் துணியில் அம்மா எனக்குப் பாவாடை தைத்திருக்கிருள் அந்த தீபாவளிக்கு. வழுக்கிக் கொண்டு தையல் மிஷினில் அது ஓடும்போதே மனம் ஆசைப்பட்டது. அந்த முறை அளவு எடுத்துப் பாவாடை தைத்தாள் அம்மா.

"அளவு எடுக்கணும் வாடீ. ஒசந்து போயிட்டே நீ." அளவு எடுத்து விட்டு நிமிர்கிருள் அம்மா.

"ரெண்டு இஞ்சு பெரிசாயிடுத்து இந்தப் பொண்ணு".

கத்தரிப்பூ ஸாடீன் பாவாடை மற்ற பாவாடைகள் மாதிரி குட்டையாக இருக்காது. வழுக்கிக் கொண்டு தரையை எட்டும்.

'உலுக்'கென்று எழுப்பி நிற்க வைத்துத் தலையைத் துவட்டுகிருள் கல்யாணி.

'ஷிம்மீ'ஸை மாட்டிக் கொண்டு பூஜை அறைக்கு ஓட்டம்.

பலகை மேல் அடுக்கியிருந்த புதுத் துணிகளில் அப்பா என்னுடையதைத் தருகிருர்.

"இந்தாடீ கறுப்பி..." அப்பா அப்படித்தான் கூப்பிடுவார்.

அப்பா அப்படிச் சொல்லும் போது சில சமயம் கூடத்தில் ஹாவென்று தொங்கும் கண்ணுடி முன் நின்று கொண்டு பார்ப்பேன். அம்மா, காதில் "எத்தனை அழகு நீ" என்று கிசுகிசுப்பதைப் போல் இருக்கும்.

சரளா வீட்டில் உள்ள கண்ணுடிப் பெட்டியில் உள்ள மீன் மாதிரி வழுக்கிக் கொண்டு போகிறது பாவாடை. வெல்வெட் சட்டை. பொட்டு இட்டுக் கொண்டு அப்பா முன் போகிறேன்.

"அட பரவாயில்லையே!" என்கிருர் அப்பா.

பட்டாஸை எடுத்து முன் அறையில் வைத்து விட்டு சண்பக மரத்தில் ஏற ஓடுகிறேன்.

நித்தியம் காலையில் சண்பகமரத்தில் ஏறிப் பூப்பறிப்பது ஒரு வேலை. பூக் குடலையில் பூ நிரப்பி அம்மாவிடம் தந்தால் "கொள்ளை பூ" என்று கண்களை விரித்து அம்மா தன் விரல்களை அதில் அளைய விடுவாள். விரல்களே தெரியாது.

ஸாடீன் பாவாடை வழுக்குகிறது. உச்சாணிக் கொம்பில் ஏற முடியவில்லை. இருட்டு வேறு. இறங்கும் தறுவாயில் படேர் என்று வெடிக்கிறது யார் வீட்டிலோ ஒரு பட்டாஸ். உடம்பு நடுங்க மரத்திலிருந்து ஒரு குதி. வீட்டினுள் ஓட்டம். மூச்சு வாங்குகிறது.

ஆசுவாசப் படுத்திக் கொண்டு முன் அறைக்குஓடி, என் பங்குப்பட்டாஸை வெடிக்கிறேன். அப்புறம்தான் பூக்குடலை நினைவு வருகிறது.

விடிந்திருக்கிறது.

பாவாடையைத் தூக்கிப் பிடித்தவாறே மரத்தினடியில் கிடந்த பூக்குடலையை எடுக்கக் குனிகிறேன். பூக்கள் சில சிதறி இருக்கின்றன. நன்ருகக் குனிந்து எடுக்கும் போது பாவாடை தரையில் விரிகிறது. புதுப் பாவாடையில் அங்கும் இங்கும் கறைகள். மரம் ஏறியதாலோ?

‘‘கல்லூஸ்...’’ என்று அழைத்தவாறே உள்ளே வந்து ‘‘பாவாடை எல்லாம் அழுக்காக்கியுட்டேண்டி. அம்மா வைவாளா?’’ என்று கேட்டுக் கொண்டு பூக் குடலையுடன் அவள் முன் நிற்கிறேன்.

கல்யாணி ஒரு நிமிடம் வெறிக்கப்பார்த்து விட்டு ‘‘அப்பா...’’ என்று கூவிக் கொண்டே போகிருள்.

கல்யாணியின் பார்வை, பூக் குடலையைக் கூட வாங்காமல் அவள் உள்ளே ஓடியது எல்லாமாக மனதில் கம்பளிப் பூச்சி நெளிகிறது. ஸாடின் பாவாடையைப் பார்க்கிறேன். வெல்வெட் சட்டையைத் தடவிப் பார்க்கிறேன்.

ஒன்றும் ஆகவில்லையே?

பகவானே, எனக்கு ஒன்றும் ஆகவில்லையே? என்னை நானே கேட்டுக் கொள்ளும் போதே தெரிகிறது ஏதோ ஆகிவிட்டதென்று. எங்கும் பட்டாஸ் ஒலிகள் கேட்டவாறிருக்கின்றன. கையில் பிடித்த பூக்குடலையுடன், வேகமாக மூச்சு விட்டவாறு உடம்பு பதற, உதடுகள் துடிக்க நிற்கிறேன்.

ஹோவென்று அழுகை வருகிறது.

அம்மாவைப் பார்க்க வேண்டும். சின்னுளப் பட்டுப்புடவைஉடுத்திய தோளில் தலையை அழுத்திப் பதித்துக் கொள்ள வேண்டும். ‘‘பயமா இருக்கே’’ என்று வெட்கமில்லாமல் சொல்லி அழ வேண்டும். அம்மா தலையைத் தடவித் தருவாள். என்னவோ ஆகிவிட்டதே பயங்கரமாக...

முறுக்குப் பிழிய வரும் மொட்டைப் பாட்டியை எங்கிருந்தோ கூட்டிக் கொண்டு வருகிருள் கல்யாணி.

பாட்டி அருகில் வருகிருள்.
‘‘என்னடீம்மா அழறே? என்ன ஆயிடுத்து இப்போ? லோகத்துலே இல்லாதது ஆயிடுத்தா?’’

பாட்டி சொன்னது ஒன்றும் தெரியவில்லை. என் உணர்வுதான் எதையோ புரிந்து கொண்டு பயத்தில் சில்லிட்டதே ஒழிய அறிவுக்கு ஒன்றும் எட்டவில்லை. மனதில் ஆழத்திலிருந்து ஆருத தாகமாய்க் கிளம்பிய ஒரே ஒரு அழைப்பு...அம்மா...

ஐந்து வயதில் ஒரு முறை காணுமல்போய் விட்டதை மீண்டும் நினைக்கிறேன். பெரிய பூங்கா ஒன்றில் நீள இருள் கவிவது தெரியாமல் நடக்கிறேன். திடீரென்று இருளும் மரங்களும், ஓசைகளும், அமைதியும் மனதில் பயத்தை உண்டாக்குகின்றன. அப்பாதான் தேடிப் பிடிக்கிருர். ஆனுல் அம்மாவைப் பார்த்ததும்தான் அழுகை பீறிடுகிறது.

அம்மா பக்கத்தில்போட்டுக்கொள்கிருள். தடவித் தருகிருள். ‘‘ஒன்றும் ஆகலியே. எல்லாம் சரியாப் போயிடுத்தே’’ என்று மெல்லப் பேசுகிருள். சிவந்த உதடுகள் நெருப்புக் கீற்ருய் ஜ்வலிக்க, தன் முகத்தை என் முகத்தின் மீது வைக்கிருள்.

இப்போதும் எங்கேயோ காணுமல்போய் விட்டதைப்போல் அடித்துக் கொள்கிறது.

கீழே உட்கார்ந்து முட்டங்காலில் தலை பதித்து அழுகிறேன். எதுவோ முடிந்துவிட்டது போல் தோன்றுகிறது. தியேட்டரில் ‘சுபம்’ காட்டிய பிறகு எழுந்து வெளியே வருவதைப் போல், எதையோ விட்டு விட்டு வந்தாற்போல் தோன்றுகிறது. அந்தச் சமயத்தில் உலக சரித்திரத்தில் எனக்கு ஒருத்திக்கு மட்டுமே அந்தத் துக்கம் சம்பவித்ததுபோல் படுகிறது. அத்தனை துக்கங்களையும் வெல்வெட் சட்டை அணிந்த மெல்லிய தோள்கள் மேல் சுமையாய்த் தாங்குவது போல் அழுகிறேன்.

இருவருமாக இருந்த மாலை வேளைகளில் அம்மா இதுபற்றி ஏன் சொல்லவில்லை என்று நினைக்கிறேன்.

மனதை வியாபித்த உணர்வு பயம் மட்டுமே. புதுச் சூழ்நிலையில், புது மனிதர்களிடையே உண்டாகும் சாதாரண பயம் அல்ல. பாம்பைக் கண்டு அலறும் மிரளலில் அரண்டு போய் வாயடைத்துப் போகும் பதைப்பு. மன மூலைகளிலெல்லாம் பயம் சிலந்தி வலைகளாய்த் தொங்குகிறது.

வெளுத்த உதடுகள் பிளந்து கிடக்கப் பார்த்த உருவம் மனதில் தோன்றுகிறது. மண்டை கல்லில் மோதி விட்டது. என் முன்னே மென் சிவப்பாய் வழுக்கையாய் நடந்து கொண்டிருந்த தலை திடீரென்று குகை வாயாய்த் திறந்து கரும் சிவப்பாய் ரத்தம் பீறிட்டு வந்தது. நிமிடத்தில் ரத்தம் தரையில் கொட்டியது. ரத்தத்தையே வெறித்துப் பார்த்தேன். சிவப்பு எங்கும் படர்ந்து கண்களிலேயே பாய்ந்து ஓடுவது போல் தோன்றியது. மனம் மீண்டும் மீண்டும் அரற்றியது. ‘‘ஐயோ எத்தனை ரத்தம், எத்தனை ரத்தம்’’ வாயில் ஓசையே பிறக்கவில்லை. ரத்தப் படுக்கை. கிழவன் வாய் திறந்தது. கண்கள் வெறித்துப் போனது. நெஞ்சில் துருத்திக் கொண்டு நிற்கிறது.

ரத்தம் எத்தனை பயங்கரமானது...உதடுகள் வெளுக்க... கை கால்கள் அசைவற்றுப் போக...

அம்மா தேவை. இருட்டைக் கண்டு பயந்ததும் அணைத்து ஆறுதல் சொல்வது போல், இந்தப் பயத்திலிருந்து மீள அம்மா வேண்டும் என்று மனம் ஏங்குகிறது. அம்மா

(15-ம் பக்கம் பார்க்க)

# என் எழுத்து

நீல. பத்மநாபன்

என் எழுத்தைப் பற்றி நானே பேசிக் கொண்டிருக்கும் நேரத்தை உருப்படியாக ஏதாவது இலக்கியப் படைப்புக்காக செலவிடுவதால் பயனுண்டு என்ற கருத்தைக் கொண்டவன் நான். இருந்தும் சில வேளைகளில் என் எழுத்தைப்பற்றி தவருன சில அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்படும் போது, அதைத் திருத்த வேறு யாரும் முன்வராமல் இருந்து விடுகையில், இப்போது போல என்எழுத்தைப் பற்றி நானே பேசவேண்டிய நிர்ப்பந்தம் வந்துவிடுகிறது.

கதைக்கான கருவைத் தேடி ஒருபோதும் நான் அலைந்ததில்லை. உதறினலும் விலகாமல் உள்ளத்தில் இறுகப் பற்றிக் கொள்ளும் கருக்களுக்கு என் மனவார்ப்புக்குத்தகுந்தவாறு ஒரு உருவம் அமைக்கிறேன் அவ்வளவுதான்! வெற்றி தோல்விகளைப் பற்றி எழுதுகையில் நான் அவ்வளவாக கவலைப் படுவதில்லை. எழுதியபின் வெளியாகும் விமர்சனங்களால் பாதிக்கப்படாமலிருக்கும் உள்ள வலு எனக்கில்லை என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். ஆனல், விமர்சனங்களுக்கு நான் பயப்படுவதில்லை. என்னைப் பொறுத்தவரையில், விமர்சனங்களால் நான் வளர்ந்திருக்கிறேன்என்று நம்புகிறேன்.

எனக்குத் தெரிந்த வாழ்க்கையை மட்டும், தட்டுத் தடங்கலின்றி என்னல் கையாள முடியும் சாதாரண மொழியில் எழுதுவதுதான் எனக்குப் பிடித்தமானது. அதீத கற்பனைகளுக்கும் புலவர் மொழிக்கும் நான் அடி பணிவதில்லை.

ஜனரஞ்சகமாக இருக்க வேண்டுமென்று ஒரு போதும் நான் எழுதியதில்லை. கூடிய மட்டும் தரமான பத்திரிகைகளுக்கு மட்டும் எழுதுவதால், என்னைப் பலருக்குத்தெரியாது. இதையும் நான் ஒரு சிறப்பாகவே எண்ணுகிறேன். சிலர், ஆனந்த விகடனில்முத்திரைக் கதை எழுதியிருக்கிறேன், தினமணிக்கதிரில் நட்சத்திரக்கதை எழுதியிருக்கிறேன் என்றெல்லாம் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்வது போல், மேற்படி பத்திரிகைகளில் எழுதாதவன் என்று ஆத்மதிருப்தியும் தற்பெருமையும் அடைகிறவன் நான். எனவே, இலக்கியப் பணியில் பொருளாதார விஷயத்தில் எனக்கு நஷ்டம்தான் என்ற உண்மையையும் இங்கே ஒப்புக் கொள்கிறேன்.

விஞ்ஞானம் ஆனலும் சரி, சோதனைகள் (experiments) இல்லாதிருந்தால் இன்று காணும் வளர்ச்சியை அடைந்தே இருக்கமுடியாது என்று நம்புகிறவன் நான், எனவே முன்னெச்சரிக்கையாக, பழகிய தடத்திலேயே சஞ்சரித்து கைக்கு எட்டும் வெற்றியை கைப்பற்ற நான் விரும்புவதில்லை. இலக்கியத்தில் ஐந்து சோதனைகள் செய்து ஐந்திலும் அடையும் தோல்வி, இல்லாவிடில் ஒரே ஒரு வெற்றி, பழகிய தடத்தில் பத்து முயற்சிகள் செய்து பத்திலும் அடையும் அமோக வெற்றியைவிட மகத்தானதாக எனக்குத் தோன்றுகிறது. எனவேதான் சோதனைகளை நான் மேற்கொள்கிறேன். உதாரணமாக 'தலைமுறைகள்' நான் பிறந்த சமுதாயத்தை படம் பிடித்துக்காட்ட நான் எடுத்துக் கொண்ட சோதனை முயற்சியின் விளைவு. எனவேதலைமுறைகளில் அந்தச் சமூகத்தின் சடங்கு சம்பிரதாயங்கள், பழக்க வழக்கங்கள், விழா விளையாட்டுக்கள்—இப்படி எல்லா நாடித்துடிப்புக்களையும் எடுத்தாண்டதோடு இது சம்பந்தமாக என் சோதனை முடிந்துவிட்டதாக நான் நினைக்கிறேன். அடுத்து நான் எழுதிய 'பள்ளிகொண்டபுரம்' நான் பிறந்த ஊரின் பற்பல பக்கங்களை—காட்சிகளை கலாரீதியில் எடுத்துக் காட்ட நான் எடுத்துக் கொண்ட இன்னெரு புதிய சோதனையின் விளைவு. அப்படி ஊரின் பல தன்மைகளை எடுத்துக் காட்டும் போது, ஊரில் வாழும் பல சமூதாயத்தார்களில் ஒரு சமுதாயமான நாயர் சமூகத்தைப் பற்றியும், அவர்கள் வாழ்வின் முக்கியமான சில தனித்தன்மைகளையும் அடக்கமாக எடுத்தாண்டிருக்கிறேன். அதே ஊரில் வாழும் வேறு பல சமுதாயத்தார்கள், இன்னும் பல முக்கியத் தோற்றங்கள்,—இவை பற்றியெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டியிருந்ததால் அதற்கு மேலும் இதுக்காக நான் அலட்டிக் கொள்ளவில்லை. ஆனல் 'பள்ளிகொண்டபுர'த்தை விமர்சித்த ஒருவர், 'சமூக இயல் பார்வையை அடிப்படையில் கொண்டது இவர் எழுத்து. அதன் அழுத்தமான பாதிப்பு 'தலைமுறை'களில் தெரிந்தது. அதுவே தலைமுறைகளை மேன்மைப் படுத்திற்று. பள்ளி கொண்ட புரத்திலும் இவருடைய அடிப்படை நோக்கு தென்படுகிறது. ஆனல் அதுவே நாவலாக இல்லாமல் வேறுபட்ட பல பார்வைகளின் அழுத்தம் இடத்திற்கு இடம் மாறுகின்றன. இது நாவலை வெகுவாகப் பாதித்திருக்கிறது'.

'ஆரம்பத்தில் நாயர் சமூகப் பழக்கங்கள் ஒரு சமூக இயலாளனின் நோக்குடன் இந் நாவலில் ஆராயபடப்போகிறது என்ற வாசகர்களின் எதிர்பார்ப்பை ஏமாற்றி நாலாந்தர தமிழ் நாவலின் கதைப்போக்கில் நாவல்

திரும்பி விடுகிறது...' என்றெல்லாம் எழுதியிருந்தார். 'நான் சமூக பழக்க வழக்கங்களின் ஒரு ஸ்பெஷலிஸ்ட், நான் எழுதுவதெல்லாம் 'தலைமுறைகளை'ப்போல், அந்தந்த சமூகங்களின் பழக்க வழக்கங்கள், சடங்கு சம்பிரதாயங்கள் பற்றி எவைகளாகத்தான் இருக்கும்' என்று யாரிடமும் எந்த அச்சாரமும் வாங்கிக்கொண்டு எழுதுகிறவனில்லை நான். என்னை மீண்டும் நானே இமிட்டேட் பண்ணி எழுதி வெற்றி அடைவதைவிட, 'என்னை இப்படி......இப்படி...' என்று முன் கூட்டிக் கணித்து ஒரு குறிப்பிட்ட சட்டத்திற்குள் அடக்கி வைத்துவிட முயற்சிக்கும் இத்தகைய விமர்சகர்களை ஏமாற்றி, மேலும் மேலும் புதிய பாணிகளில் சோதனை செய்து கொண்டிருப்பதுதான் எனக்குப் பிடித்தமானது. எனவே 'தலைமுறைகளு'க்கு இணை 'தலைமுறைகள்'தான். பள்ளிகொண்ட புரத்துக்கு இணை பள்ளிகொண்டபுரம்தான். தலை முறைகள் ஒரு சமூகத்தின் கதை என்றால், பள்ளிகொண்டபுரம் ஒரு ஊரின் கதை என்பதுதான் இங்கே அடிப்படை உண்மை. அதை இனம் கண்டுகொள்ள முடியாதவர்களின் ஏமாற்றங்களுக்கு நான் பொறுப்பாளி அல்ல!

இதே மாதிரித்தான் என் சிறுகதைகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவிதமாய்சோதனை செய்து பார்த்துக் கொண்டிருக்கிறேன் நான். சமீபத்தில் என் சிறுகதைகளைப்பற்றி கூறுகையில் ஒரு விமர்சகர் நாவல் இலக்கியத்தில் எவரெஸ்டை தொட்டுவிட்ட நீலபத்மநாபன் சிறுகதைகளில் அதல பாதாளத்தில் விழுந்து விட்டார் என்று காரணம் எதுவும் சுட்டிக் காட்டாமல் எனக்காக மிகவும் நொந்துபோய் எழுதியிருந்தார். ஜூலியஸ் சீஸரின் புரூட்டஸைப்போல் மிகவும் கெட்டிக்காரத்தனமாய் என்னை மதிப்பிடும் மேலே குறிப்பிட்டவரைப் போன்ற விமர்சகர்களுக்கு நான் சொல்வதெல்லாம் இதுதான்: 'என்னைத் தேவனாக வாழ்த்தித் துதிபாடவும் வேண்டாம், ராட்சஸனாக்கி வசைபாடவும் வேண்டாம். வெறும் சாதாரண மனிதன் நான்... எனக்குத் தெரிந்ததை என் போக்கில் ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறேன். பணம் கிடைக்கும் பத்திரிகைகளுக்கு ஒரு பேனா, கிடைக்காத பத்திரிகைகளுக்கு இன்னொரு பேனா என்று இரண்டு பேனாக்கள் வைத்திருக்கும் தமிழ்நாட்டு சில சிருஷ்டி எழுத்தாளர்களைப் போல் என்னிடம் நாவலுக்கு ஒரு பேனா, சிறுகதைக்கு இன்னொரு பேனா என்று இரண்டு பேனாக்கள் இல்லை. (மேற்படி நட்சத்திர முத்திரை எழுத்தாளர்களை எங்களுக்குத்தான் சொந்தம் எங்களுக்குத்தான் சொந்தம் என்று ஜனரஞ்சக பத்திரிகை ஆசிரியர்களும், இலக்கியப் பத்திரிகை ஆசிரியர்களும் போட்டி போட்டுக் கொண்டு சொந்தம் பாராட்டும் காட்சியும் இன்று தமிழ் நாட்டிலின்றி வேறெங்கும் காணக்கிடைக்காது.) என்னிடம் இருப்பதெல்லாம் ஒரே ஒரு பேனா தான். ஒரே ஒரு நெஞ்சம்தான்! ஆனால் இயற்கை உட்பட கடவுள் படைத்த சகல சராசரங்களிலுமே தென்படும் பூரணமின்மை கேவலம் மனிதன் என் படைப்பில் மட்டும் இல்லாமலா இருந்துவிடப் போகிறது! எனக்கு சில லிமிட்டேஷன்ஸ் இருக்கும். நாவல்கள் ஆனாலும் சரி, சிறுகதைகள் ஆனாலும் சரி, என்னால் செய்ய முடிவதெல்லாம் ஹானஸ்டியோடு ஆத்மார்த்தமாக அதில் செயலாற்றுவது......அவ்வளவுதான்! ஆனால் ஒரேயடியாக சிறுகதைகள் யாவும் மட்டம், நாவல்கள் அபாரம் என்றெல்லாம் முன் கூட்டி திட்டமிடப்பட்ட ரெடிமேடு விமர்சனங்களுக்குள் என்னை சமாதிசெய்துவிடாதீர்கள்...

ஜனரஞ்சகப் பத்திரிகைகளால் மழுங்கடிக்கப்பட்ட மட்டரகமாக்கப் பட்டிருக்கும் தமிழ் வாசகர்கள் உலவும் ஒரு ஃபீல்டில் தரம்தரம் என்று நினைத்து எதை எதையெல்லாமோ மிகத் தீவிரமாக உருவாக்க அலட்டிக் கொண்டு கனமான கருக்களையும் பெரிய பெரிய திட்டங்களையும் போட்டு உழைப்பது சிரமமாகத்தான் இருக்கிறது. பாமரவாசகர்கள் போகட்டும், எந்தப் புதுமையையும் எளிதில் ஜீரணிக்கும் மலையாள மாணவர்களின் இடையிலிலும், வெறும் பழைய பண்டித மனப்பான்மையும், கட்டுப் பெட்டித்தனமும் கொண்ட தமிழ் மாணவர்களைக் காண்கையில் நம்மால் எப்படி பெருமை கொள்ள முடியும்! உதாரணமாக 'தலைமுறை'களை வாசித்துவிட்டு சில தமிழ் மாணவர்கள் அதன் கொச்சை மொழியைக் கண்டு முகம் சுளித்ததாக அறிய நேர்ந்தது. அவர்களிடம் நான் கேட்பதெல்லாம் உயிரோடு வாழும் மக்களின் மொழிக்கு தீண்டாமைக் கற்பித்துவிட்டு கற்பனையில் ஒரு மொழிக் கோட்டைக் கட்டும் நீங்கள் எப்படி மனிதாபிமானியாக முடியும்" என்றுதான்! பேச்சு நடையை புறக்கணித்துவிட்டு இலக்கியம் செய்த மொழிகள் ஒன்றுமே உருப்பட்டதில்லை; உயிர் வாழ்ந்ததில்லை. மக்கள் மத்தியில் புழங்கப்படும் மொழிக்கு புத்தக அந்தஸ்த்து கொடுத்துவிட்டால், தூயமொழி குடிமுழுகிப்போய்விடுமா? பேச்சு நடையும் எழுத்து நடையும் ஆங்கிலத்தில் போல் தமிழிலும் உடனடி ஒன்றாகிவிடும் என்ற பேராசை இல்லை. ஆனாலும் அவைகளின் இடையிலிருக்கும் அஜகஜ வித்தியாசத்தைச் சிறிதளவாவது குறைக்க முடிந்தால் அது பெரிய காரியமல்லவா? மேலும் கதைக்கு எடுத்துக் கொண்ட சமூகததில் உலவும் மனிதர்களின் வாழ்வை எப்படி ஒரு தூய கற்பனைமொழியில் சொல்வது என்றுதான் எனக்குப் புரியவில்லை.

[திருவனந்தபுரம் சைவப் பிரகாச சபையில் 23—10—1971 அன்று நடந்த இலக்கிய விழாவில் நிகழ்த்திய உரை.]

# ஏழு பேர்

ஆர். ராஜகோபாலன்

அங்கே மொத்தம் ஏழுபேர்இருந்தார்கள். அவர்களில் பெரியவனாகத் தெரிந்த ஒரே ஒரு பையன் மட்டுமே கால் சிராயும் சட்டையும் அணிந்திருந்தான். மற்றவர்களில் சிலர் ஒன்று மேலேயோ அல்லது கீழேயோ மட்டுமே அணிந்திருந்தார்கள். இரு பொடியன்கள் ஒன்றுமே இல்லாது இருந்தார்கள். ஒரு சிறுமிகூட ஒரு கிழிந்தபாவாடை ஒன்றையே இடுப்பு வரை கட்டியிருந்தாள். அவள் மடியிலிருந்த குழந்தை வாயில் விரலைப் போட்டுக்கொண்டு அவள் மார்பில் தலையை சாய்த்துக் கொண்டிருந்தது.

இவன் உட்கார்ந்திருந்த திண்ணைக்கு நான்கு வீடுகளுக்கப்பால அவர்கள் இப்போது வந்திருந்தார்கள். நன்றாகவும் தெளிவாகவும் அவர்கள் செய்கை இவனுக்குத் தெரிந்தது. கீழே கிடந்த ஒரு அறுந்த மாலையை அவர்களில் ஒருவனுக்குப் போட்டுக் கைதட்டி பெருஞ்சத்தம் செய்து கொண்டிருந்தார்கள். ஒரு பையன் நழுவி விழும் கால்சிராயை ஒரு கையில் பிடித்துக்கொண்டே கூச்சல் போட்டுக் கொண்டிருந்தான்.

அவர்களுக்குச் சுற்றுப்புற பிரக்ஞையே இல்லாதது போல இவனுக்குப் பட்டது. பொழுது போகாமல் வெளியே வந்து உட்கார்ந்திருந்த இவனுக்கு அது மிகுந்த வேடிக்கைக்குரியதாகவும் மகிழ்ச்சி அளிப்பதாயும் கூட இருந்தது. ஒரு அயலானின் பார்வையுடனேயும் கலைக் கண்களுடனேயும் தான் அதை கண்டுகளிப்பதாக நினைத்துக் கொண்டான்.

அவர்கள் இப்போது இவனுக்கு எதிரில் சாலையோரமாக கிடத்தி வைக்கப்பட்டிருந்த கைவண்டியிடம் நெருங்கி வந்தார்கள். அதே சிறுவனுக்கு மறுபடியும் மாலை போட்டுக் குதித்துக் குதித்துக் கூச்சல் போட்டார்கள். சட்டை போடாமல் பரட்டைத்தலையுடனிருந்த அந்தச் சிறுவன் கைகளைக் கூப்பி மிகுந்த கம்பீரத்துடன் தலையை அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் அசைத்துக் கொண்டிருந்தான். கைவண்டியை இவனுக்கு மிக அருகில் கொண்டு வந்து "வாழ்க வாழ்க" என்று அவர்கள் கோஷம் செய்தார்கள்.

இவனுக்குத் திடீரென்று தானும் அவர்களில் ஒருவனாகிவிட்டதைப் போலவும் தானும் அவர்களுடன சேர்ந்து விளையாடிக் கொண்டிருப்பதைப் போலவும் ஒருவித பயம் ஏற்பட்டது. உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு தான் ஒரு பி. எஸ். ஸி. என்பதையும் அன்று தான் லாண்டரியிலிருந்து வாங்கிவந்த வேஷ்டியையும் பனியனையும் போட்டுக்கொண்டிருப்பதையும் நினைத்துக் கொண்டான். எழுந்து நின்று வேஷ்டியை மடித்துக் கட்டிக்கொண்டு "போங்கடா போங்க" என்று கைகளை ஆட்டி சத்தம் செய்தான்.

இப்போது மாலையுடனிருந்த பையன் மாலையை எடுத்து இவன் மேல் படும்படியாக வீசிப் போட்டான். இவன் நகர்ந்து நின்றுகொண்டு மிகுந்த கோபத்துடனும் அருவருப்புடனும் மாலையைக் கையில் எடுத்தபோது அவர்களில் பெரியவனாக இருந்த பையன் "சாவு மாலை" "சாவு மாலை" என்றுகத்தினான். எல்லோரும் ஒன்று சேர்ந்து கொண்டு "வாழ்க" என்பதற்குப் பதில் இப்போது "ஒழிக ஒழிக" என்று பெருங் கூச்சல் எழுப்பினார்கள். வாயில் விரலைப் போட்டுக்கொண்டிருந்த குழந்தை தலையைத்தூக்கி ஒரு நிமிடம் இவனைப் பார்த்துவிட்டு மீண்டும் தலையைச் சாய்த்துக் கொண்டது.

"சாவு மாலையென்றால் நீங்களேனடா தொடுகிறீர்கள்?" என்று அவர்களுக்கு மேல் கத்திக் கேட்கவேண்டும் போல் இவனுக்குத் தோன்றியது. திடீரென்று தன்னுடைய நிலையிலிருந்து கீழே விழுந்து விட்டதைப் போன்று உணர்ந்தான். தன்னை யாரும் கவனிக்கிறார்களா என்று மிகுந்த வெட்கத்துடன் தலையை லேசாகத்தூக்கி சுற்றும் முற்றும் பார்த்தான். அவனுக்குத் தெரிந்தவர்கள் அங்கே யாரும் இல்லை.

சிறுவர்கள் கைவண்டியை விட்டு விட்டு சிறிது தூரத்தில் நின்று கொண்டு இன்னும் பெரியதாகக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களை அலட்சியம் செய்வதை போல் இவன் வேறெங்கோ பார்த்துக்கொண்டிருந்தும அவர்கள் தொடர்ந்து சத்தம்செய்து கொண்டிருந்தார்கள். திடீரென்று முகமெல்லாம் வேர்ப்பதைப் போலவும் கைகால்கள் நடுங்குவதைப் போலவும் உணர்ந்தான். ஏதோ ஒரு முக்கியமான வேலையை மறந்துவிட்டிருந்தது இப்போதுதான் ஞாபகம் வந்ததைப் போல் வீட்டிற்குள் ஓடினான். அன்று தான் இவன் நீண்ட நேரம் இடைவிடாது ரேடியோ கேட்டுக்கொண்டிருந்தான். சமீப காலத்தில் வானொலி நிகழ்ச்சிகள் மிகுந்த முன்னேற்றத்தை அடைந்திருப்பதாயும், பொழுது போக்கு அம்சங்கள் நிறைந்திருப்பதாயும கூட இவனுக்கு அன்று தோனறியது.

●

# 170 - 100

இஸ்ட்வான் ஆர்கேனி

இந்த நம்பரை டயல் செய்தீர்களானல் டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலிருக்கும் விசேஷத் தகவல் நிலேயம் நீங்கள் கேட்கும் எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லும்.

நாளுக்கு நாள் அதிகமாக மக்கள் இதை உபயோகிக்கிருர்கள். எப்போதையும் விட சிக்கலான கேள்விகளேக் கேட்கிருர்கள். கன்னி மேரிக்கு, புனித மகப்பேறுக்குப் பிறகு மாதவிடாய் ஆயிற்ரு? பியானே கண்டுபிடிப் பதற்கு முன் இசைக் கலேஞர்கள் சிரமப்பட் டார்களா? மார்க்ஸும், எஞ்சலும் சந்தர்ப்ப வசத்தால்தான் ஒன்று சேர்ந்தார்களா? அல்லது அவர்கள் சந்திப்பு நிர்ணயிக்கப் பட்டதொன்ரு? சாதாரண வரிக்குதிரை ஜோடிக்கு வரிகள் இல்லாமல் கட்டங்களுடன் குட்டி பிறக்கமுடியுமா? இன்னும் பலபயங்கரக் கேள்விகள்.

மேன்மேலும் அறிஞர்களேயும், நிபுணர் களேயும் அமர்த்தியாயிற்று. 120 செயற்குழுக் கள் அமைக்கப்பட்டுவிட்டன. ஏறக்குறைய ஒரு மூளேடிரஸ்டே டெலிபோன் எக்ஸ்சேஞ் சில் அமைக்கப்பட்டுவிட்டது. அவர்கள் புனித ஸயனேடுடனும், பிரிட்டிஷ் ராயல் சொஸைட்டியுடனும் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிருர்கள். ஆகையால் இப்போது எம்மாதிரியான கேள்விகளுக்கும் அவர்களால் பதில் சொல்ல முடியும். இதனல் நிர்வாகம் வாஸ்தவமாக, சிக்கலானதாகத்தான் மாறி விட்டது.

ஆனல், அந்தக் காரணத்தால் கடமை யுணர்ச்சியுடன் பதில் சொல்வதிலிருந்து அவர்கள் பிறழ்வதில்லே. உதாரணமாக,

"தொல்லே தருவதற்கு மன்னிக்கவும். இங்கே ஒரு சிறிய முதலேயைப் பந்து ஒன்று அடித்து விட்டது."

"எவ்வளவு சிறியது?"

"ஐந்து அங்குல நீளம் இருக்கும்"

"அப்படியானல் அது ஒரு பல்லிதான்."

இம்மாதிரியானச் சின்ன விஷயங்களேப் பற்றி அவர்கள் கவலேப்படுவதில்லே என்று நினேத்தால் தவறு. எக்ஸ்சேஞ்சு உடனே சுறுசுறுப்பாக அவர்களுக்கு முதலுதவிக் குழு வின் தொடர்பைத் தருகிறது.

ஒரு டாக்டர்—பல உயிர்களேக் காப்பாற் றிப் பெயர் பெற்றவர் — காத்திருக்கிருர். அவருடைய முதல் கேள்வி:

"நீங்களும் பல்லிதானே?"

"இல்லே ஐயா, ஸ்டீபன் உயர்நிலேப் பள்ளி மாணவர்கள்"

"ஓ, அப்படியானல் விபத்தில் சிக்கிய வரின் உறவினர்கள் இல்லே? உறவினர் களுக்கு நாங்கள் நோயைப் பற்றிய விபரங் களேத் தர அனுமதி இல்லே"

"முதல் முறையாக அதைஇப்போதுதான் பார்த்தோம். நாங்கள் கால்பந்தாடுகையில் பந்து அதை அடித்து விட்டது"

"மூச்சு இருக்கிறதா?"

"இருக்கிறது"

"நாடி?"

"சாதாரணமாகத்தான் இருக்கிறது. அது மைதானத்தைவிட்டு நகரமாட்டேன் என் கிறது. அவ்வளவுதான்"

"ம்...அதற்குக் கிச்சு கிச்சு மூட்டிப்பாருங் களேன்."

அவர்கள் போய் அதைப் புல் இதழ் ஒன்றி ஞல் கிச்சு கிச்சு மூட்டிப் பார்க்கிருர்கள். திரும்ப வந்து, அது சிறிது அசைந்ததே தவிர நகரவில்லே என்று சொல்கிருர்கள்.

"Concussion with locomotor paralysis complications. உங்களே நியூராலஜி டிபார்ட் மெண்டுக்கு மாற்றுகிறேன்"

நரம்பு நிபுணர் கையை வேகமாக ஆட்டிக் கொண்டு "கொல்லுங்கள் அதை" என்று கர் ஜிக்கிருரா என்ன? இல்லே. நடப்பது அது அல்ல. வெகுநேரம் யோசித்துவிட்டுக் கேட் கிருர்;

"உனக்கு எதில் நம்பிக்கை அதிகம் மகனே? பழைய கால வைத்தியமா அல்லது மனேதத்துவ நிபுணரைக் கூப்பிடட்டுமா?"

"இரண்டாவதாக நீங்கள் சொன்னது'

தெளிவான, தெம்பான பெண்குரல் ஊக்கத்துடன் ஒலிக்கிறது. இந்த கேஸ்

மோசமானது அல்ல. இன்னும் சொல்லப் போனால் இதைக் குணப்படுத்துவது மிக எளிது.

"நோயாளிக்குக் குழந்தைப் பருவத்திலிருந்து மோசமான தாழ்வு மனப்பான்மை இருந்திருக்கிறது. சமீபத்திய அதிர்ச்சி (தலையில் பந்து தாக்கியது) தன்னைப் பற்றிய உணர்வு எல்லாவற்றையும் அதன் நினைவிலிருந்து நீக்கி விட்டது. தான் பல்லி என்று தெரியாததாலேயே அது நகர்வதில்லை. அதைத்தான் அதற்கு இப்போது உணர்த்த வேண்டும்."

"அதனால் நாங்கள் இப்போது என்ன செய்ய வேண்டும்?"

"அது பல்லி என்பதை அதற்கு விளக்கிச் சொல்லுங்கள்"

"அது சரி, ஆனால் அது மனிதர்கள் பேசுவதைப் புரிந்து கொள்ளாதே"

"அது என் கவலை இல்லை"

"பின் யாருடையது?"

"இங்கே மொழியியல் குழு ஒன்று ஊரும் ஜந்துகளின் பேச்சுக்கென்றே இருக்கிறது. ஆனால் உங்களைத் தத்துவச் சங்கத்துடனும் இணைக்க முடியும்... ஒரு வேளை நீங்கள் கடவுளுடனேயே பேச விரும்புகிறீர்களோ?"

நிச்சயம்.

அங்கேயிருந்த பெண் ஆய்வாளர் தெளிவான குரலில் விளக்கினாள். வாரத்தில் மூன்று நாட்கள் (திங்கள், புதன், வெள்ளி) மெட்டீரியலிஸ்டுகளும், மற்ற நாட்களில் மானோதீஸ்டுகளும், பாலிதீஸ்டுகளும், ஜென் புத்திஸ்டுகளும், எக்ஸிஸ்டென்ஷியலிஸ்டுகளும் தொடர்பில் இருந்தார்கள். நிச்சயமாக ஒன்றும் சொல்ல முடியாது என்றாள்.

ஆனால் ஆச்சரியப் படத்தக்க வகையில் எல்லாம் வல்ல இறைவனே ரிஸீவரை எடுத்தார்.

"என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்? அச்சிறு பல்லியைப் பிழைப்பிக்கவா?"

"அதுதான் மிக எளிதானது போலிருக்கிறது"

"சரி, நீங்கள் போய் விளையாடுங்கள்." கடவுள் சொன்னார்.

அவர்கள் அவ்வாறே செய்தார்கள். மைதானத்திற்குப்போய் சுற்றும் முற்றும் பார்த்தார்கள். பல்லி போய்விட்டிருந்தது. அவர்களால் இப்போது விளையாட முடிந்தது. (இத்துடன், எதேச்சையாக, கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற பல நூற்றாண்டுகால விவாதம் தீர்மானமாக முடிவுற்றது) இம் மாதிரியான கடமையுணர்ச்சியுடன் நம்பிக்கையான முறையில் விசேஷத் தகவல் நிலையம் செயல்படுகிறது. சரியாகச் சொன்னால், செயல்பட்டது.

துரதிர்ஷடம் வாய்ந்த நாடு. ஏதாவது ஒழுங்காக வேலை செய்தால், உடனே எங்கிருந்தோ குறும்புக்காரர்களும், குற்றம் சொல்வோரும், ஏமாற்றுக்காரர்களும் வந்து விடுகிறார்கள். இந்த மாதிரியான ஒரு ஆசாமி 170 – 100 ஐ டயல் செய்து கேட்டான்.

"என்ன ஹோ?"

ஒருமுறை எக்ஸ்சேஞ்ஜ் நிலைதடுமாறியது. என்ன செய்வதென்று அதற்குத்தெரியவில்லை. இந்த மாதிரியான கேள்விக்குப் பதில் யாருக்குத் தெரியும்? தொடர்புகள் இங்குமங்கும் மாறின. முன்னும் பின்னும் மணியடித்தது. ஆனால் சரியான பதில் கிடைக்காமல் குழப்பத்தில்தான் முடிந்தது. இறுதியில் ரிஸீவரில் துயரம் நிரம்பிய ஒலிகள் மட்டுமே கேட்டன. அப்போதிலிருந்து விசேஷத் தகவல் நிலையம் மோசத்திலிருந்து படுமோசமாகி, மிகச் சாதாரண கேள்விக்குக்கூட பதில் சொல்ல முடியாததாகச் சமீபத்தில் ஆகிவிட்டது. நேரம் இப்போது என்ன என்று கேளுங்கள்; நடுங்கும் குரல் ஒன்று பதில் சொல்லும்.

"எங்களுக்குத் தெரியாது."

பரிதாபம்! அவர்களின் தன்னம்பிக்கை போய்விட்டது.

தமிழில் : ரங்கநாதன்

---

# இழப்பு

நா. சேதுராமன்

விளக்கு மந்தமாய் வழிந்து கொண்டிருந்தது. காகிதத்திலிருந்த எழுத்துக்கள் இவனுக்கு மிகவும் சிரமத்தை அளித்தன. இவன நிழல் தரையிலும் சுவரிலும் பல்பு ஆட்டத்திற்கேற்ப ஆடிக்கொண்டிருந்தது. இவன் பார்வை காகிதத்திலிருந்து தரையில் விழுந்தது.

பகல் வெயிலுக்கு அனலாய்க் கொதித்துக்கிடந்த ஜிங்க் கூரையும், மலைப்பாறைச் சுவர்களும் இன்னும் கொஞ்சம் வெப்பத்து

டனே புழுக்கின. தரையிலிருந்த கடப்பைக் கற்களில் ஆங்காங்கு பளீரென்று மின்னிய கல்வெள்ளிகள் பல்பு ஆட்டத்தில் விட்டில் களாய்த் தெறித்தன. வெட்டவெளியின் 'ஓ'வென்ற மெல்லிய ஓசையில் ஆறு திரும்பு வதால் உண்டாகும் பயங்கரபாவமான ஓசை மெதுவாக நிறைந்தது.

இவன் பார்வையின் ஒரு பக்கத்தைக் கையிலிருந்த காகிதம் மறைத்தது. அதன் எழுத்துக்கள் புலப்படாததில் இவன் அக்கறை கொள்ளவில்லை மறுபக்கம் பார்வை தரையில் அவள் மேல் விழுந்தது. அவள் இடைக்குக் கீழே கைக்காகிதம் மறைத்தது. அதை விலக்காமல் தெரிந்த அளவில் அவளைப் பார்த்தான். அவள் கண்கள் பாதி மூடி, பாதி திறந்து செருகிய நிலையில் சிறிது அச்சமே கொடுத்தன. நெற்றியில் வியர்வை அரும்பிக் காய்ந்து கொண்டிருந்தது. அவள் ஒருக்களித்திருந்ததால் அந்தப் பக்கத்து மார்பகம் தரையில் அழுந்தி, அடியில் கடப்பைக் கல் தரை ஈரமாயிருப்பது நன்ருய்த் தெரிந்தது. அவள் முகச்சோர்வில் அதிருப்தி நிழலாடி இவனுள் நடுங்கினுன்.

கையிலிருந்த காகிதம் நழுவி அந்தரத்தில் ஊஞ்சலாடி சுவர்மூலையில் தாறுமாருய் மோதிக் கொண்டது. இப்பொழுது பிஷப் தெரிந்தான். அவனின் லேசாய்த் தெரித்த வெண்மையும் கருப்புமான தாடியில் கீழ்த்தாடை புதைந்து, இயலாமையில் நெளிந்து தொய்ந்த உதடுகளை உரசிய அவன் பார்வை இன்னும் கீழாக அவன் வயிற்றைத் தடவிக் கொணடு இறங்கியது. சிறிது மல்லாந்து மூச்சு வாங்கிய அவன் கணகளை அறைச் சுவர்கள் முழுவதும் ஓட விட்டதில் இவனும் கூடவே ஓடி கரடுமுரடான கற்களில் மோதிக்கொண்டு இறுதியில் அவன் பார்வை இறங்கிய இடத்திற்கே வந்தான். அவன் மறுபடியும் ஒருக்களித்துப் படுத்தான்.

கருத்துப் பருத்திருந்த குறிதொய்ந்து பாதி விறைத்தது. அது சிலுவையிட்டதாய் தோன்றியதில் இவனும் சிலுவையிட்டுமெல்ல அதை உருவினுன். தான் கைகளால் அனுபவம் கொள்வதான உணர்வில் வெறிகொண்டான். பிஷப் இவன் தோளை அழுததிக் கொண்டு முன்புறம் நகர்ந்தான். இவன் தான் ஒரு பக்கம் நெருக்கப்படுதலினல் அவளை உராய்தலிலிருந்து அகலவேண்டி அவளைத்தாண்டி சுவரில சாய்ந்து கால்களை நீட்டினுன். தன்னைப் பாடையில் தூக்கிச் செல்வதான நிலையில் தான் திரும்பத் திரும்ப எழுந்து உட்கார்ந்து விட தனனை வேகத்துடன அவர்கள் படுக்கவைப்பதான உணர்வில் அவன் சுவரோரம சாய்ந்தான்.

திடீரென்று தொடங்கிவிடும் மலைக் காற்றில் ஆற்றின் சத்தம பேரோசையாகி இவன கட்டடம் கிடுகிடுப்பதாய்த் தோனறியது. கூரை விளிம்புகளைக் கிழித்த காற்றினல் இவன் கண்டதுண்டமாய் வெட்டப்பட்டான். விர் விர்ரென்று சுழன்று வந்த இலைகள் கூரையைத் துளைத்துக் கொண்டு அறையில் இறங்கி நிறைந்தன.

புரண்டு வரும் வெள்ளத்தில் இவன் உருண்டு உருண்டு மிதந்தான். தான் உடலே இல்லாமல் நசுங்கி நசுங்கி ஆற்ருேடே அவளுள்ளே போய் வயிற்றில் அடைந்தான்.

எங்கோ யாரோ உயரத்திலிருந்து கழித்த மலத்தை, உண்ணப்போன பன்றிகள் தங்கள் முகம் முதுகெங்கும் தாங்கிய மலத்தோடு வீசும் காற்றின் வேகத்தோடு உறுமிக் கொண்டு பாய்ந்தன.

நாய்கள் துரத்தத்துரத்த இவன் கனவேகமாக ஓடினுன். போலீஸ்காரன் தொப்பிக்குள் ளிருந்து இறங்காமல் இவன் மகா வேகத்தோடு அவைகளுக்கு முன்னல் ஓடினுன். மலை விளிம்பிற்கு வந்ததும் அங்கிருந்து ஆற்றைத் தாண்டி எதிர்ப்புற மலைவழியாக ஓடினுன். மலைகளைத் தாண்டித் தாண்டி ஓடி, கடைசியில் கடற்கரை மணலில் வந்து விழுந்தான்.

இவன் விழித்தபோ , பிஷப் அங்கில்லை. அவள் உடைதரித்துக் கொண்டிருந்தாள். நினைத்தபடியே அவள் திறந்திருந்த கதவை இழுத்துப் பூட்டிக்கொண்டு வெளியே போய் வட்டாள். சுவர் வழியே அவள் போவது தெரிந்தது. இவன் குலுங்கிக் குலுங்கி அழுதான். அவளும் குலுங்கியே நடந்தாள். அறையில கிடந்த இலைகள் இவன்கணணீரில் மூழ்கி அழுகின. இவனும் அவைகளுடன் அழுகிக் கொணடே அழுதான்.

தன் அருகில் எஞ்சினியர் நின்று கொண்டிருப்பதைக் கண்டு விழித்தான். கண்களிலிருந்து வழிந்து கொண்டிருந்த கண்ணீரை நர்ஸ் துடைத்தாள்.

"சம்பளத்துடன் மூன்று மாதம் விடுமுறை ஏற்பாடு செய்திருக்கிறேன். நிம்மதியாக ஓய்வு எடு" என்று அவர் குனிந்து கூறினர்.

இவன் பார்வை வெறிச்சென்று அறையில் படர்ந்தது.

அவளும் வந்தாள். இவனருகில் வந்து அவன் முகத்தைத் துடைத்தாள். தொடர்ந்து வந்த பிஷப் இவனைப் பார்த்து புன்முறுவல் பூத்தார். இவன் பார்வை யாரிடமிருந்தது என்பது அனுமானிக்கவியலாது குத்திட்டிருந்தது.

"கர்த்தருக்கு நன்றி" என்று அவர் அவளைப் பார்த்துக் கூறிவிட்டு, சிலுவையிட்டு ஜெபம் செய்தார். அவளும் மௌனமாய் மண்டியிட்டாள். ●

# ஜோர்ஜ் லூயி போர்ஹெ

ஆண்ட்ரி மார்வா

‘கசடதபற’ வின் 9வது இதழில் ஜோர்ஜ் லூயி போர்ஹெயின் சிறுகதையான ‘வட்டச் சிதைவுகள்’ வெளி வந்தது — தர்மு அரூப் சிவராமின் அருமையான மொழி பெயர்ப்பில். அதற்கு முன்பு போர்ஹெயின் இலக்கியக் கருத்துக்களின் தொகுப்பை (ஆர். சுவாமிநாதன) ‘ஞானரதம்’ வெளியிட்டது. இவையெல்லாம், வாசகர்களிடையே சிறிய சலனத்தைக் கூட ஏற்படுத்தவில்லை. போர்ஹெவுக்கும் அவர் தரத்தில் உள்ளவர்களுக்கும் இந்த நிலைமை நேரக்கூடும் என்பது உண்மைதான் என்றாலும் ஆண்ட்ரி மார்வாவின் இந்தக் கட்டுரை * போர்ஹெயின் இலக்கிய ஆதர்சங்களைத் தெளிவாகக் காட்டும்.

மிகச்சிறந்த எழுத்தாளரான போர்ஹெ சிறு கட்டுரைகளையும், கதைகளையுமே எழுதியிருக்கிறார். எனினும், அவர் எழுத்தின் கூர்மையும், படைப்புச்செறிவும், இறுக்கமான, அநேகமாகக் கணிதத்தைப் போன்ற நடையுமே அவரை ‘மிகச் சிறந்த’ என்றழைக்கப் போதுமானவை. அர்ஜென்டினாவில் பிறந்து, அதன் இயல்பைப் பெற்றிருந்த போதிலும், சர்வதேச, கால இலக்கியத்தில் வளர்ந்த போர்ஹெவுக்கு ஆன்மீக வீடு கிடையாது. காலம், இடம் என்பவற்றிற்கப்பால் அவர் தன் கற்பனை, குறியீட்டு உலகங்களைப் படைக்கிறார். போர்ஹெயை நிர்ணயிக்கையில், புதுமையான, முழுமையான எழுத்துக்களே நினைவுக்கு வருகின்றன. என்பது அவர் அவர் சிறப்பின் குறிப்பான அம்சம். காஃப்கா, ஆலன்போ இருவரைப் போலவும், சில நேரங்களில் ஹென்ரி ஜேம்ஸ், வெல்ஸைப் போலவும், எப்போதும் அவருடைய ‘சொந்த meta-physics என்றழைக்கப் படுவதில், மேதாற்ற முரண்பாடுகளின் [paradoxes] தீர்க்க நீட்சியினால் வெலரியைப் போலவும் இருக்கிறார்.

## I

அவர் படைப்பின் மூலங்கள் எண்ணற்றவை: எதிர்பார்த்திராதவை. போர்ஹெ ஒவ்வொன்றையும் படித்திருக்கிறார். குறிப்பாக யாருமே இப்போது படிக்காதவற்றை, கபிலிஸ்டுகள், அலெக்ஸாண்டிரிய கிரேக்கர்கள், இடைக்காலத் தத்துவஞானிகள் — எல்லாவற்றையும். அவருடைய அறிவு ஆழமானதல்ல — அவர் படிப்பவற்றிலிருந்து எதிர்பார்ப்பதெல்லாம் ஒளியைத் தரக்கூடிய, கருத்துக்களைத் தரக்கூடிய சில கணங்களைத்தான் — ஆனால் அது பரந்தது. உதாரணமாக, பாஸ்கல் எழுதினார்; ‘இயற்கை அளவிட முடியாத வட்டம்; அதன் மையம் எங்குமிருக்கிறது. ஆனால் சுற்றுக்கோடோ எங்கும் இல்லை’ போர்ஹெ உடனே இந்த உவமையை நூற்றாண்டுகள் வழியே தேடிக் கண்டுபிடிக்க முனைகிறார். கியார்டனோ புரூனோ (1584) சொல்லியிருப்பது அவர் கண்களில் படுகிறது. ‘இந்தப் பிரபஞ்சம் மையமாகவே இருக்கிறது அல்லது, பிரபஞ்சத்தின் மையம் எங்குமிருக்கிறது. ஆனால் அதன் சுற்றுக்கோடு எங்குமில்லை என்று நிச்சயத்துடன் சொல்லலாம்’ ஆனால் புரூனோ பன்னிரண்டாவது நூற்றாண்டு பிரெஞ்சு மதவியலாளரான அலென் தலில்லின் ஒரு கருத்தை — அது மூன்றாவது நூற்றாண்டின் Corpus Hermeticum த்திலிருந்து கடன் வாங்கியது — படித்திருக்கிறார். ‘கடவுள் என்ற அறியத்தக்க உலகத்தின் மையம் எங்குமிருக்கிறது; ஆனால் அதன் சுற்றுக்கோடுதான் எங்குமில்லை’ — இத்தகைய ஆராய்ச்சிகள் சீனர்களைப் பற்றியாகட்டும், அரபியர்களைப் பற்றியாகட்டும், அல்லது எகிப்தியர்களைப் பற்றியாகட்டும், போர்ஹெவுக்கு மகிழ்ச்சி தருபவை. அவை அவர் கதைகளின் கருவுக்கு அவரை அழைத்துச் செல்கின்றன.

அவர் தனக்கென்று கொண்ட முன்னோடிகளில் பலர் ஆங்கிலேயர். வெல்ஸிடம் அவருக்கு அளவுகடந்த மதிப்பு உண்டு. இன்னும் சரியாகச் சொன்னால் ஆஸ்கார் ஒயில்டு, வெல்ஸை ‘விஞ்ஞான பூர்வமான ஜூலி வெர்ன்’ என்று சொன்னதைப்பற்றி போர்ஹெ பொருமுகிறார். போர்ஹெயின் கருத்துப்படி ஜூலி வெர்னின் கற்பனை, எதிர்கால நிகழ்வுக் கூறுகளைப் [probabilities] பற்றியது [நீர்மூழ்கிக் கப்பல், சந்திரனுக்குப் பயணம்]. வெல்ஸினுடையதோ பூரணமான சாத்தியக் கூறுகளை [possibilities] [பார்வைக்குத் தென்படாத மனிதன், மனிதனை விழுங்கும் மலர், நேரத்தை ஆராயும் இயந்திரம்]

* LABYRINTHS: selected stories and other writings: Jorge Luis Borges — Penguin 1970

அல்லது வெறும் சாத்தியமின்மையைப் பற்றியது [மனிதன் வருங்காலத்திலிருந்து எதிர்கால மலருடன் வருவது]. அதற்கும் அப்பால் வெல்ஸின் நாவல் மனித குறிக்கோட்களுக்குள் அடங்கிய எல்லா அம்சங்களுக்கும் குறியீடாகிறது. சிறந்த, காலத்தைக் கடந்து நிற்கும் எந்தப் புத்தகமும் நிர்ணயமின்மையை உடையதாக இருக்கவேண்டும் என்று போர்ஹெ சொல்கிறார். அது கண்ணாடியாகப் படிப்பவரின் அம்சங்களை உணரச் செய்கிறது. ஆனால் ஆசிரியர் அதன் முக்கியத்துவத்தை அறிந்திராதவர் போலக் காணப்பட வேண்டும்—இது போர்ஹெயின் எழுத்திற்கே நல்ல விளக்கமாகிறது. ''கடவுள் மதவியலில் ஈடுபடக் கூடாது: கலை நம்மிடமிருந்து எதிர்பார்க்கும் நம்பிக்கையை எழுத்தாளன் வாதயூகங்களால் அழித்துவிடக் கூடாது''.

அவர் வெல்ஸைப் போற்றுமளவிற்கு ஆலன் போவையும், செஸ்டர்டனையும் போற்றுகிறார். ஆலன்போ அதீத பயங்கரக் கதைகளைச் செம்மையாக எழுதினார்; துப்பறியும் கதையைக் கண்டு பிடித்தார்; ஆனால் இவ்விரண்டு விதமான எழுத்தையும் அவர் கலந்து விடவில்லை. செஸ்டர்டன் இதை முயற்சிசெய்தார் என்பது மட்டுமல்ல, அது அவருக்கு மிக இயல்பாகவே அமைந்திருந்தது. Fr. ப்ரௌனின் துணிகர முயற்சிகள் ஒவ்வொன்றும் பகுத்தறிவின் பெயரில், விளக்க முடியாத உண்மையை விளக்க முயல்கின்றன. ''செஸ்டர்டன், தான் போவோ, காஃப்காவோ இல்லை என்று சொன்னாலும், அவர் இயல்பு கனவு மருட்சியை [nightmare] நோக்கியதொன்றாகவே இருந்தது''. காஃப்கா, போர்ஹெயின் நேர் முன்னோடி. The Castle ஐ போர்ஹெயே எழுதியிருக்க முடியும். ஆனால் அவர் அதை ஒரு பத்துபக்கக் கதையாக—முழுமையைக் கருதியும், சொகுசான சோம்பலின் காரணமாகவும் எழுதியிருப்பார். காஃப்காவின் முன்னோடிகள் இலியின்ஜெனோ, கீர்க்ககார்ட், ராபர்ட் ப்ரௌனிங் என்று போர்ஹெயின் விசாலமான அறிவு, மகிழ்ச்சியுடன் சுட்டிக் காட்டுகிறது. இவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் காப்ஃகாவிடமிருந்த அம்சங்களில் ஏதாவது ஒன்று இருந்தது. ஆனால் காஃப்கா எழுதவேயில்லையென்றால் யாரும் அதைக் கவனித்திருக்க மாட்டார்கள். இதிலிருந்து, போர்ஹெவுக்கே உரித்தான தோற்ற முரண்பாடு பிறக்கிறது. ''ஒவ்வொரு எழுத்தாளனும் தன் முன்னோடியை உருவாக்குகிறான்''

போர்ஹெவுக்கு உற்சாகம் கரும் இன்னொரு ஆங்கிலேய எழுத்தாளர் John William Dunne. காலத்தைப் பற்றிய மிக விசித்திரமான புத்தகங்களை எழுதியிருக்கும் இவர், இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எல்லாம் நம் கனவுகளில் இருப்பது போல் உடன் நிகழ்வாக இருக்கின்றன என்று சொல்கிறார். [ஷோப்பனா, போர்ஹெ சுட்டிக்காட்டுகிறார், ஏற்கனவே இதைப்பற்றி எழுதியிருக்கிறார். வாழ்வும், கனவும் ஒரே புத்தகத்தின் பக்கங்கள். அவற்றைத் தொடர்ச்சியாகப் படிக்கும் போது வாழ்கிறோம்: இங்கொன்றும் அங்கொன்றுமாகப் புரட்டும் போது கனவு காண்கிறோம்.] சாவில் நம் வாழ்க்கை நிகழ்ச்சிகள் அனைத்தையும் மறுபடியும் காண்போம். அப்போது கனவில் இருப்பதைப் போல் அவற்றைச் சுதந்திரத்துடன் ஒன்று சேர்ப்போம். ''கடவுள், நம் நண்பர்கள், ஷேக்ஸ்பியர் நம்முடன் ஒததுழைப்பார்கள்''. இந்த மாதிரி மனதுடன், காலத்துடன், தூரத்துடன், கனவுகளுடன் விளையாடுவதை விட போர்ஹெவுக்கு மகிழ்ச்சி தருவது வேறெதுவுமில்லை. விளையாட்டு சிக்கலாக, ஆக, அவருக்குமகிழ்ச்சியே. கனவு காண்பவனும் முறையே கனவு காணப்படுவான். ''மனம் கனவு கண்டுகொண்டிருந்தது. உலகம்தான் அதன் கனவு''. எல்லா தத்துவஞானிகளிடத்திலும், டெமாக்ரிடஸிலிருந்து ஸ்பினோஸாவரை, ஷோப்பனரிலிருந்து கீர்க்ககார்ட்வரை, அவர் அறிவார்த்த தோற்ற முரண்பாடுகளின் சாத்தியக் கூறுகளைக் காண்பதில் கவனமாகஇருக்கிறார்.

## II

வெலரியின் நோட்டுப் புத்தகத்தில் இம்மாதிரியான குறிப்புகள் காணப்படுகின்றன. ''பயங்கரக் கதை ஒன்றிற்கான கரு. புற்றுநோய்க்கான ஒரேமருந்து மனிதனின் சதைதான். விளைவுகள்.'' போர்ஹெயின் புனைவு இம்மாதிரியான கருத்திலிருந்து பிறப்பதை என்னால் நன்றாகக் கற்பனை செய்து பார்க்க முடிகிறது. புராதன, நவீன தத்துவ ஆசிரியர்களைப் படிக்கையில் அவர் ஒரு கருத்து அல்லது ஒரு கொள்நிலையைக் [hypothesis] கண்டு நிற்கிறார். பொறி பறக்கிறது. இந்தக் கேலித்தனமான மேற்கொள்ளல் [postulate] அதனுடைய தர்க்கரீதியான விளைவுகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டால் எந்த மாதிரியான உலகத்தை உருவாக்க முடியும் என்று வியக்கிறார்.

உதாரணமாக, ஒரு எழுத்தாளன், பியர் மெனர், டான் க்விக்ஸாட்டை மறுபடியும் எழுத முனைகிறான். இன்னொரு டான் க்விக்ஸாட் அல்ல; அதே க்விக்ஸாட். அவன் முறை? ஸ்பானிஷ் மொழியை நன்றாகத் தெரிந்துகொள்வது, கத்தோலிக்க மத நம்பிக்கையை மறுபடியும் மேற்கொள்வது, மூர்களை எதிர்த்துப் போரிடுவது, ஐரோப்பியச் சரித்திரத்தை மறந்து விடுவது. சுருக்கமாக, செர்வாண்டிஸாகவே மாறிவிடுவது. இந்தத் தன்னிச்சைச் சேர்க்கை மிக முழுமையாகிய

தன் விளைவாக இருபதாம் நூற்றாண்டு எழுத்தாளன் செர்வாண்டிஸின் நாவலை அப்படியே மறுபடியும் எழுதுகிறான், வார்த்தைக்கு வார்த்தை ஒற்றுமை, மூலத்தைப் பாராமல். இங்கே போர்ஹெயின் பிரமிப்பைத்தரும் ஒரு வரி: "செர்வாண்டிஸின் எழுத்தும், மெனாரின் எழுத்தும் சொற்களில் ஒரே மாதிரியாக இருக்கின்றன; ஆனால் பின்னவரது அளவிட முடியாதவாறு செழுமையாக இருக்கிறது." தோற்றத்தில் அபத்தமாகப்படும் இது, உண்மையிலேயே ஒரு புதுமையான கருத்தை சொல்கிறது என்று வெற்றிகரமாகக் காட்டுகிறார். நாம் படிக்கும் க்விக்ஸாட் செர்வாண்டிஸினுடையதல்ல; எப்படி நம் மாடம் பொவரி ப்ளாபரினுடையது அல்லவோ. இருபதாம் நூற்றாண்டின் ஒவ்வொரு வாசகனும் அனிச்சையாகக் கடந்தகாலப் பேரிலக்கியம் ஒவ்வொன்றையும் தனக்கே உரித்தான வகையில் மறுபடியும் எழுதிக் கொள்கிறான். போர்ஹெயின் கதையை வெளிக்கொண்டுவர இம்மாதிரியான நீட்சி போதுமானதாக இருந்தது.

அடிக்கடி நம்மைத் தடுமாறச் செய்யும் தோற்ற முரண்பாடு, தத்துவ ஆசிரியர்கள் அதற்குத் தந்த அரூப அமைப்பில், நமக்குப் புரிவதில்லை. போர்ஹெ அதிலிருந்து ஸ்தூலமான யதார்த்தத்தை உண்டு பண்ணுகிறார். அவருடைய Library of Babel பிரபஞ்சத்தின் படிமம்: அளவற்றது, எப்போதும் மறுபடியும் மறுபடியும் தொடங்குவது. இந்த நூல் நிலையத்தில் இருக்கும் புத்தகங்களில் அநேகமானவை புரியாதவை. எழுத்துக்கள் ஏதோ ஒரு சந்தர்ப்பப் போக்கில் குவிக்கப் பெற்றவை அல்லது குரூரமான விதத்தில்திரும்பத்திரும்ப எழுதப்பட்டவை. ஆனால் சில நேரங்களில் இந்த எழுத்துப் பின்னலில் ஒரு தெளிவான வரி அல்லது வாக்கியம் காணப்படுகிறது. இயற்கையினுடைய நியதியும் இவ்வாறானது தான். குழப்பமான உலகில்ஒழுங்கின்சின்னஞ் சிறிய அடையாளங்கள். Lottery in Babylon வாழ்க்கையில் சந்தர்ப்பத்தின் பங்கை மிகக் கூர்மையாக ஊடுருவி, நிகழ்த்திக் காட்டும் மற்றொன்று. இதில் வரும் அதிருஷ்டத்தையும், துரதிருஷ்டத்தையும் விநியோகம் செய்யும் மர்மமான கம்பெனி சாமுவேல் பட்லரின் Erewohn ல் வரும் சங்கீத பேங்குகளை நமக்கு நினைவூட்டுகிறது.

எந்த அமைப்பையும் ஏற்காது, ஆனால் metaphysics னால் கவரப்பட்டு, போர்ஹெ அவற்றிலிருந்து மூளைக்கான விளையாட்டை உருவாக்குகிறார். தன்னிடம் இரண்டு மனப் போக்குகள் இருப்பதைக் காண்கிறார். ஒன்று மத, தத்துவக் கருத்துக்களை அவற்றின் அழகுணர்ச்சிக்காகவும், அவற்றின் தந்திரமயமான அல்லது அற்புத உட்பொருளிற்காகவும் மதிப்பது. இது ஒருவேளை அடிப்படை நம்பிக்கையின்மையின் அடையாளமாக இருக்கலாம். இன்னொன்று, மனிதனின் கதைகள் அல்லது உவமைகளை உருவாக்கக் கூடிய கற்பனைத் திறன்மிகக்குறுகியது, ஆனால் இச்சிலபடைப்புகளே ஒவ்வொருவருக்கும் எல்லாமாக இருக்க முடியும் என்று முன்னமேயே நிர்ணயித்துக் கொள்வது.

இம்மாதிரியான கற்பனைகள் அல்லது கருத்துக்களில் சில குறிப்பாக அவரை ஈர்க்கின்றன. எண்ணற்ற மறு நிகழ்வுகள்; அல்லது நீட்சேவுக்கு விருப்பமான கருத்து, உலக சரித்திரத்தில் நிகழ்ச்சிகளின் வட்ட நிகழ்வு; கனவுக்குள் கனவு; நூற்றாண்டுகள் நிமிஷங்களாகவும், வினாடிகள் வருஷங்களாகவும் காண்பது. (The Secret Miracle); உலகின் மனப்பிரமையான நிலை: நொவாலிஸை போர்ஹெ மேற்கோள் காட்டுகிறார். "தான் காணும் பிரமைகளை இயற்கையான தோற்றங்களாகக் காணும் வகையில் தன்னைத்தானே வசியம் செய்து கொள்பவன் தான் உலகத்தின் தலைசிறந்த மந்திரவாதியாக இருக்கமுடியும்" நம்மிடமும் அப்படித்தானே? போர்ஹெ, ஆமாம், நாம் அப்படித்தான் இருக்கிறோம் என்கிறார். நாம்தான் இந்தப் பிரபஞ்சத்தைக் கனவு கண்டு வைத்திருக்கிறோம். அது தன்னுள் கொண்டிருப்பவற்றில் எண்ணப் பின்னல்களுக்கும், எண்ணப் பிரதிபலிப்புகளுக்கும் இடையில் முனைந்து நிர்மாணிக்கப்பட்ட சேர்க்கையைக் காண்கிறோம். இக்கலவை அல்லது சந்திப்பு கடுமையானது; ஆனால் எப்போதும் தீவிரமாகவும், ரகசியங்களை உள்ளடக்கியும் இருக்கிறது. இக் கதைகளிலெல்லாம் பிரியும் சாலைகளையும், எங்கும், மற்றச் சந்துகளைத் தவிர, கொண்டு சேர்க்காச் சந்துகளையும் இவற்றைப் போன்றமற்றவைகளையும் தான் கண் எட்டும்தொலைவுவரை காண்கிறோம். இது, போர்ஹெவுக்கு மனித எண்ணத்தின் ஒரு படிமமாகத்தான் படுகிறது. இது முடிவில்லாமல் காரண, விளைவுகளின் கணக்கற்றத் தொடர்புகளின் வாயிலாகத் தொடர்ந்து, மனிதனுடைய சந்தர்ப்பத்திற்கு அப்பால் ஒருவேளை இருக்கக் கூடியதைக் கண்டு வியக்கிறது. இந்தப் பின்னற்பாதைகளில் ஏன் திரியவேண்டும்? மறுபடியும், அழகுணர்ச்சிக் காரணங்களுக்காகத்தான். இந்த நிகழ்கால அளவற்ற தன்மையினால்தான் 'இம்மயக்கந் தரும் கோலங்கள்' துயரம்நிரம்பிய அழகுடனிருக்கின்றன. அமைப்பு, உள்ளடக்கத்தைவிட முக்கியமானது.

III

போர்ஹெயின் அமைப்பு அடிக்கடி Swift ஐ நினைவுப் படுத்துகிறது. அபத்தத் தன்மையிடையே அதே கம்பீரம்; விவரங்களில்நுணுக்கம். நம்ப முடியாத கண்டுபிடிப்பை விளக்க

அவர் நியாயஉணர்வுடன், அறிவாளியின் குரலில் கற்பனை எழுத்துக்களை உண்மையான, ஆழமான மூலங்களுடன் சேர்த்துச் சொல்வார். ஒரு முழுப் புத்தகத்தை எழுதுவதை விட—அது அவருக்குச் சலிப்பைத் தரும்—எப்போதும் இருந்திராத புத்தகத்தை ஆராய்கிறார். 'வாயினால்சொல்ல ஐந்து நிமிஷங்களே தேவையான ஒரு கருத்தைச் சொல்ல ஐநூறு பக்கங்கள் எதற்கு?' என்று கேட்கிறார்.

இம்மாதிரியாகச் சொல்லப்படும் கதை ஒன்றின் ஒழுங்கற்ற தலைப்புதான் "Tlon, Uubar, Orbis Tertius". யாரும் அறிந்திராத கிரகத்தின் வரலாற்றைப் பற்றியது இது. அந்தக் கிரகம் கட்டிடக்கலையையும், சண்டைகளையும், புராணங்களின் பயங்கரத்தையும், மொழிகளின் கர்ஜனையையும், சக்ரவர்த்திகளையும், கடல்களையும், கனிப்பொருட்களையும், பறவைகளையும், மீன்களையும், அல்ஜீப்ராவையும், நெருப்பையும், மதவியல், தத்துவச் சர்ச்சைகளையும் முழுமையாகக் கொண்டது. இந்தப் புதிய உலகின் படைப்பு, வானசாஸ்திர நிபுணர்கள், பொறியியலாளர்கள், உயிரியல்வாதிகள், தத்துவஞானிகள், ஜியோமிதிக்காரர்கள் ஆகியோர் கொண்ட ஒரு ரகசியச் சங்கத்தின் வேலையாகத் தெரிகிறது. அவர்கள் படைத்த Tlon, பெர்க்லி, கீர்க்கார்ட் கூறிய, வெறும் அகவாழ்க்கை மட்டுமே நிலவுகிற உலகம். Tlonல் ஒவ்வொருவரும் அவரவர்க்கே உரிய உண்மையையே கொண்டிருக்கிறார்கள். புறப்பொருள்கள் அவரவர் விரும்பியவாறே இருக்கின்றன. அகில உலக பத்திரிகைகள் இக்கண்டுபிடிப்பை அறிவிக்கின்றன. வெகு சீக்கிரத்தில் Tlon, நம் உலகை மறைத்து விடுகிறது. ஒரு கற்பனை இறந்தகாலம் நம் இறந்த காலத்தையே கொள்கிறது. தனிமையான விஞ்ஞானிகளின் குழு ஒன்று பிரபஞ்சத்தையே மாற்றிஅமைத்து விட்டது. இது எல்லாம் பைத்தியக்காரத்தனமானது; நுணுக்கமானது; சிந்தனைக்கு முடிவின்றி உணவைத் தருவது.

போர்ஹெயின் மற்ற கதைகள் குட்டிக் கதைகள்;புதிரானவை; வெளிப்படையாகஇல்லாதவை. மற்றவை, செஸ்டர்டன் பாணியில் துப்பறியும் கதைகள். ஆனால் அவற்றின் கரு முற்றிலும் அறிவார்த்தமாகவே உள்ளது. துப்பறிபவனது முறைகளுடன் உள்ள பரிச்சயத்தைப் பயன்படுத்திக் கொள்கிறான் குற்றவாளி. இந்தமாதிரியான கற்பனையில் ஒன்று, மற்ற ஆத்மாக்களிடையே மிகவும் நுண்ணிய, கண்ணில் எளிதாகப் படமுடியாத பிரதிபலிப்புகளை விட்டுச் சென்றவனை இடைவிடாது தேடுவதைப் பற்றியது. மற்றொன்று, மரண தண்டனையை எதிர்நோக்கியிருக்கும் குற்றவாளி எதிர்பார்ப்புகளும், உண்மை வாழ்க்கையும் எப்போதும் ஒன்றிணைவதில்லை என்பதை உணர்கிறான், அவன் தன் சாவின் சூழ்நிலையைக் கற்பனை செய்து கொள்கிறான். அது அவனுக்கு எதிர்பார்ப்பாக மாறிவிட்டதால், அது அவனுக்கு ஒருபோதும் உண்மையாக முடியாது.

தூய்மையும், புலமையும் உள்ள நடையில் இந்தப் படைப்புகள் விவரிக்கப் படுகின்றன; இதை ஆலன் போவுடன்தான் இணைத்துப் பார்க்க வேண்டும்; ஆலன் போவின் தொடர்ச்சியாக பாடிலேர் தோன்றினர்; பாடிலேரால் மல்லர்மே: மல்லர்மேவால் வெலரி: வெலரியினால் போர்ஹெ. போர்ஹெ தனது தீவிர சக்தியால்தான் குறிப்பாக வெலரியை நமக்கு நினைவூட்டுகிறார். 'தவறுகள் செய்யக் கூடிய கடவுளை உடைய மதத்தைப் படைப்பதுதான் அன்பாய் இருப்பது. அடுக்கடுக்கான ஊனங்களால் சிலசமயம் ஃப்ளாபெரையும், அரிதான அடைமொழியால் செயின்ட்ஜான் பெர்ஸையும் ['ஒரு பறவையின் ஆறுதல் சொல்ல முடியாத அழுகை'] போர்ஹெ ஒத்திருக்கிறார். ஆனால் இந்த உறவுகளைக் குறிப்பிட்டபிறகு, போர்ஹெயின் நடை அவருடைய சிந்தனையைப் போல் மிகவும் அசலானது என்பதைச் சொல்லிவிடவேண்டும்: Tlonன் தத்துவஞானிகளைப் பற்றி அவர் எழுதுகிறார். "சத்தியத்தையோ, அதைப் போன்றதையோ அவர்கள் தேடவில்லை. அவர்கள் அற்புதத்தைத் தேடுகிறார்கள். தத்துவம் என்பதை அதீதக் காட்சி இலக்கியத்தின் ஒரு கிளை என்று அவர்கள் நினைக்கிறார்கள்." போர்ஹெயின் கலையையும், மகத்துவத்தையும் இது நன்றாகவே விளக்கி விடுகிறது. ●

---

## கழுவாய்

பட்டினிச்சாமி கோயில்

பதவியாண்டைகள் களிக்க

பழம் ஏட்டுப் பூசாரிகள்ஆண்டிற்கிருமுறை

நடத்துமப் பலியில்

தம் பங்குக்காய்

தெருவெங்கும் நாண்டு தொங்கும்

பட்டமளிப்புவிழாவுடைகள்.

ந. மகாகணபதி

(4-ம் பக்க தொடர்ச்சி)

ஜில்லென்று கரத்தைத் தோளில் வைத்து "இதுவும் ஒரு அழகுதான்" என்கக்கூடாதா?

"எழுந்திரேண்டீ ப்ளீஸ். எத்தனை நாழிடீ அழுவாய்?" என்னுடன் கூட உட்கார்ந்து தானும் ஒரு குரல் அழுத கல்யாணி கெஞ்சுகிறாள்.

"அம்மா..."

"அம்மாதான் அடுத்த வாரம் வராளே. இப்போதான் இதைப் பற்றி லெட்டர் போட்டேன். ராதுவுக்கு பெண் பார்க்கறது எல்லாம் முடிஞ்சப்புறம் வருவா. இப்போ நீ எழுந்திருடீ. சுத்த தலைவேதனை". கல்யாணிக்குக் கோபம் வர ஆரம்பிக்கிறது.

"எனக்கு என்னடீ ஆயிடுத்து?"

"உன் தலை மண்டை ஆயிடுத்து, எத்தனை தடவை சொல்றது?"

"இனிமே எல்லாம் நான் மரத்துலே ஏறக்கூடாதா?"

'நறுக்'கென்று குட்டுகிறாள் கல்யாணி.

"தடிச்சி! அரைமணியா எழுந்திரு பாவாடையை மாத்தறேன்னு கெஞ்சறேன். நீ கேள்வி வேற கேக்கறியா? அப்பா இவள் ரொம்பப் படுத்தருப்பா" என்று அப்பாவுக்குக் குரல் கொடுக்கிறாள்.

அப்பா வந்து "அசட்டுத்தனம் பண்ணக்கூடாது, கல்யாணி சொல்றபடி கேக்கணும்" என்கிறார்.

முறுக்குப் பாட்டி வேறு "என்ன அடம் பிடிக்கிறாள்! எல்லாருக்கும் வர தலைவிதி தானே" என்கிறாள், அப்பா போனபிறகு.

ஏழு நாட்கள். அம்மா வர இன்னும் ஏழு நாட்கள். ராதுவைப் பெண் பார்த்த பிறகு.

இருட்டில் தடுமாறுவதைப் போல் ஏழு நாட்கள்.

அடுத்தகத்து மாமி, எதிர் வீட்டு மாமி எல்லோரும் வருகிறார்கள் ஒரு நாள்.

"தாவணி போடலையாடி கல்யாணி?"

"எல்லாம் அம்மாவந்தப்புறம்தான் மாமி. இது அடங்காப்பிடாரி. அம்மா சொன்னால்தான் கேட்கும்."

"இனிமே எல்லாம் சரியாப் போயிடுவா. இனிமே அடக்க ஒடுக்கம் வந்துடும்".

ஏன்?

இனிமேல் என்ன ஆகிவிடும்?

தாவணி ஏன் போட்டுக் கொள்ள வேண்டும்? அம்மா சொன்னாளே..."இப்படியே இருடீம்மா, பாவாடையை அலைய விட்டுண்டு..." நான் ஏன் மாற வேண்டும்?

யாருமே விளக்குவதில்லை.

பொம்மை போல் என்னை உட்கார்த்தி வைத்துப் பேசுகிறார்கள். அப்பா வந்தால் தலைப்பைப் போர்த்திக் கொண்டு மெதுவாகப் பேசுகிறார்கள்.

ஐந்தாம் நாள் "நீயே எண்ணை தேச்சுக்கோடி" என்று சுடச்சுட எண்ணையைக் கிண்ணியில் ஊற்றிக் கொடுக்கிறாள் கல்யாணி.

இடுப்பின் கீழ் நீண்ட கூந்தலுடன் அழுதவாறே போராடி விட்டு ஷிம்மீஸுடன் கூடத்துக் கண்ணாடி முன் நிற்கிறேன்.

"இனிமே பாத்ரூமிலேயே ட்ரஸ் பண்ணிக்கனும் தெரிஞ்சுதா?" என்கிறார் அப்பா.

அப்பா போன பிறகு கதவைச் சாத்துகிறேன். ஷிம்மிஸைக் கழற்றிப்போடுகிறேன். கறுப்பு உடம்பைக் கண்ணாடி பிரதிபலிக்கிறது முகத்தை விடச் சற்றே நிறம் மட்டமான தோள்கள், கைகள், மார்பு, இடை, மென்மையான துடைகளின் மேல் கை ஓடுகிறது. நான் அதே பெண் இல்லையா? அம்மா என்ன சொல்லப் போகிறாள்?

ஸ்கூல் யூனிபார்ம் போட்டுக் கொள்கிறேன்.

கதவைத் திறந்ததும் கல்யாணிவருகிறாள். "ஸ்கூல்லே ஏன் வரல்லேன்னு கேட்டா என்னடீ சொல்வே?"

கல்யாணியை வெறித்துப் பார்க்கிறேன். கூண்டிலிருந்து விடுபட்ட பட்சிபோல் குதூகலத்துடன் ஸ்கூலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த வேகம் குறைகிறது.

"ஒன்னும்சொல்லவேண்டாம். சும்மாஇரு".

அன்று 'கேம்ஸ்' பீரியடில் விளையாடவில்லை. அகன்ற மரம் ஒன்றின் பின்மறைந்து கொள்கிறேன். முன்பு ஒரு முறை அப்படி விளையாடாமல் இருந்திருக்கிறேன். மறுநாள் காலை மிஸ். லீலா மேனன் வகுப்பில் "நேற்று விளையாடாத முட்டாள்கள் யார்?" என்றாள். நான் எழுந்திருக்கவில்லை.

"நீ ஏன் எழுந்திருக்கவில்லை?" என்றாள்.

"நான் முட்டாள் இல்லையே மிஸ்" என்றேன். ப்ரோக்ரஸ் ரிபோர்ட்டில் எழுதி விட்டாள் இம்பர்டினன்ட் என்று.

அன்று மிஸ். லீலா மேனன் திட்டு பற்றி கூட மனம் பயப்படவில்லை. இப்போது எனக்கு ஆகியிருக்கும் ஒன்றைவிட வேறு எதுவும் எப்போதும் என்னைப் பாதிக்காது என்று படுகிறது.

மரத்தடியே உட்கார்ந்து வழக்கம் போல் எனிட் ப்ளைடன் படிப்பதில்லை. கீழே வெட்டப் பட்டிருந்த குழியில் உதிர்ந்தவாறிருக்கும் பழுத்த இலைகளிடம் நான் கேட்கிறேன்;

"எனக்கு என்னதான் ஆகித் தொலைந்து விட்டது?"

கூண்டிலிருக்கும் கைதி நீதிபதியின் வாயைப் பார்ப்பதுபோல் அம்மாவின் சொல் ஒன்றுக்காக மட்டுமே மனம் எதிர்பார்க்கிறது.

கண்களைத் தாழ்த்தி என்னைப் பார்த்தவாறே "உனக்கு ஆகியிருக்கும் இதுவும் அழகுதான்" என்பாளா அம்மா? பயமுறுத்திய முறுக்குப் பாட்டி, கல்யாணி எல்லோரையும் புன்னகையின் ஒரு தீப் பொறியில் ஒதுக்கித் தள்ளி விடுவாள். அம்மா வித்தியாசமானவள். அவள் நிற்கும் இடத்தில் வேண்டாதவை அழிந்து வெறும் அழகு மட்டுமே ஆட்சி செலுத்தும். அவளுக்கு எல்லாமே அழகுதான்.

அம்மா ரொம்ப தேவையாக இருக்கிறாள். ஏதோ ஒன்று விளக்கப்பட வேண்டும். கத்தரிப்பூ ஸாடின் பாவாடையை நினைத்தாலே உடம்பு வியர்த்துப்போய் நடுங்குகிறதே, நாக்கு தடித்துப் போய் மரக்கட்டையாய் வாயில் லொட்டென்று படுத்து விடுகிறதே, திடீரென்று இருட்டு கவிந்து கொள்கிறமாதிரியும், திரும்பிப் பார்ப்பதற்குள் 'ணங்'கென்ற சத்தமும், ரத்தப் பெருக்கும் நீண்டு கட்டையாய் போன உடலும் அந்த இருட்டில் தோன்றுவது போல இருக்கிறதே, அதை மென்மையான வார்த்தைகளால் யாராவது விளக்க வேண்டும்.

நான் யாருமே இல்லாமல் இருப்பது போல் உணர்கிறேன்.

தோட்டக்காரன் எழுப்பியபின் மெள்ள வீட்டுக்குப் போகிறேன்.

"ஏண்டீ இவ்வளவு லேட்? எங்கே போனே?"

"எங்கேயும் போகலை. மரத்தடியிலே உட்கார்ந்திருந்தேன்."

"தனியாவா?"

"உம்"

"ஏண்டீ, நீஇன்னும் சின்னப்பொண்ணா? ஏதாவது ஆகி வைத்தால்?"

ஸ்கூல் பையை விட்டெறிகிறேன். முகம் எல்லாம் சூடேறுகிறது; செவிகளைக் கையால் மூடிக் கொண்டு வீறிட்டுக் கத்துகிறேன்.

"நான் அப்படித்தான் உட்காருவேன். எனக்கு ஒன்னும் ஆகலை".

ஒவ்வொரு வார்த்தையையும் நீட்டி, அழுத்தி வெறிக்கத்தலாய்க் கத்துகிறேன்.

அப்பாவும் கல்யாணியும் அதிர்ந்துபோய் நிற்கின்றனர்.

நான் கோபித்துக் கொண்டு மொட்டை மாடிக்குப் போய் உட்காருகிறேன். சண்பக மரத்தின் வாசனையோடு அங்கேயே இருக்கலாம். கல்யாணியும், அப்பாவும் இங்கே வரக் கூடாது. நானும் சண்பக மர வாசனையும் மட்டுமே. ஒன்றும் பேசாத, தொடாத அந்த வாசனை வீட்டு மனிதர்களைவிட நெருங்கிய ஒன்றாகப் படுகிறது. இவர்கள் பேசாமல் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அம்மா மாதிரி விழிகளை விரித்துச் சிரிப்பு.

அம்மா அப்படிப் பார்ததால் நெஞ்சினுள் ஏதோ செய்யும். வாய் விட்டுச் சிரிக்கத் தோன்றும். பாடத்தோன்றும். அம்மா சிருஷ்டிப்பவள். ஆனந்தத்தை, உத்ஸாகத்தை அழகை எல்லாம் தலையைத்திருப்பி ஒரு புன்னகையால் ஜாலம் செய்து வரவழைப்பவள்.

கல்யாணி மேலே வருகிறாள்.

"சாப்பிட வாடிம்மா சின்னராணி. அம்மா உன்னைச் செல்லம் கொடுத்து குட்டிச் சுவராக் கிட்டா."

அலட்சியமாக உதட்டைப் பிதுக்கியவாறே எழுந்து கொள்கிறேன்.

மறுநாள்காலை அம்மா வருகிறாள். டாக்ஸியின் கதவைத் திறந்து, கரும் பச்சைப் பட்டுப் புடவை கசங்கியிருக்க, அம்மா வீட்டிற்குள் வருகிறாள்.

"என்ன ஆச்சு?" என்கிறார் அப்பா.

"பொண்ணு கறுப்பாம். வேண்டாம்னுட்டான் கடங்காரன்".

"உங்கக்கா என்ன சொல்றா?"

"வருத்தப் படறா பாவம்."

"நமக்கும் ஒரு கறுப்புப் பொண்ணு உண்டு."

மொட்டென்று அம்மா முன் போய் நிற்கிறேன்.

கல்யாணி லெட்டரில் எழுதியதை விட விளக்கமாய் நானே சொல்லவேண்டும் என்று தோன்றுகிறது. மெல்ல அவள் கழுத்துப் பதிவில் உதடுகள் நடுங்க மென்குரலில் எல்லாவற்றையும் அரற்ற வேண்டும் போல்படுகிறது. நெஞ்சில் தெளியும் பயத்தைக் கூற வேண்டும் என்று அடித்துக் கொள்கிறது.

ஏதோ மர்மமான ஒன்றை—இரவு படுத்துக்கொண்டதும்தொண்டையை அடைத்துக் கொள்ள வைக்கும் உணர்வை, என் உடம்பே எனக்கு மாறுதலாகப்படும் தவிப்பை—அம்மா விளக்கப் போகிறாள் மெல்ல என்று அவள் முகத்தையே பார்க்கிறேன். வாழைத்தண்டு போல் நீண்ட கரங்களால் அவள் என்னை அணைக்கப் போகிறாள். நான் அழப் போகிறேன் உரக்க. அம்மாவின் கூந்தலில் விரல்களைத் துளைத்துப் பெருத்த கேவல்களுடன் அழப் போகிறேன்.

அம்மா என்னைப் பார்க்கிறாள்.

நான் ஒரு கணம் ராதுவாய் அவள் கண் முன் மாறுகிறேனா என்று தெரியவில்லை.

"உனக்கு இந்த இழவுக்கு என்னடீ அவசரம்? இது வேற இனிமே ஒரு பாரம்." சுளீரென்று கேள்வி.

யாரைக் குற்றம் சாட்டுகிறாள்?

ஒலியில்லாக் கேவல்கள் நெஞ்சை முட்டுகின்றன.

அம்மாவின் உதடுகளும், நாசியும், நெற்றிக் குங்குமமும், மூக்குப் பொட்டும், கண்களும் ரத்த நிற ஜ்வாலையை உமிழ்வது போல் தோன்றுகிறது.

அந்த நெருப்பில் அவள் மேல் போர்த்தியிருந்த தேவ ஸ்வரூபம் அவிழ்ந்து விழ நிர்வாணமான வெறும்மனித அம்மாவாய் அவள் படுகிறாள். அந்த ஈரமில்லாச் சொற்கள் பட்டாக் கத்தியாய் எழுந்து முன்பு முளை விட்டிருந்த அத்தனை அழகுகளையும் குருட்டுத்தனமாய் ஹதம் செய்கிறது. தீராத பயங்கள் கரும் சித்திரங்களாய் நெஞ்சில் ஒட்டிக்கொள்கின்றன.

அக்னியே ஸ்வா ஆஆஹா......அசுத்தங்கள் மட்டும் எரிக்கப் படவில்லை. மொட்டுக்களும் மலர்களும் கூடக் கருகிக் போயின.

●

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.